# 65. மார்க்கண்டன்

அர்த்த ஜாம பூஜையெல்லாம ஆகிவிட்டது. குளிர்ந்த இரவுக் காற்றில் மணிகளின் கம்பீர நாதம் பூஜையின்போது எழுந்தது. இன்னமும் ஓயவில்லை. அமிருதகடேசுவரனின் சந்நிதியிலிருந்து எல்லோரும் வெளியேறி விட்டனர். கோவிலில் கடைசியாகச் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் முடித்துக் கொண்டு அர்ச்சகரும் அவருடன் இருந்தவர்களும் கர்ப்பக்கிருகத்தின் கதவை இறுகச் சாத்தி மூடிப்பூட்டிக் கொண்டு கோவிலின் மற்ற இடங்களையும் பார்த்துக் கொண்டு வீடு போய்விட்டார்கள். மார்க்கண்டனுக்கு அன்றிரவுடன் பதினாறு வயது நிரம்புவது அவர்கள் யாருக்கும் தெரியாது. தெரிந்திருந்தால் அப்படி அவர்கள் நிம்மதியாக வீடு திரும்பியிருக்க மாட்டார்கள்; அர்த்தஜாமப் பூஜையைக் கொஞ்சம் தள்ளிப் போட்டிருந்தாலும் போட்டிருப் பார்கள்.

மார்க்கண்டச் சிறுவன் அன்றும் வழக்கம் போல் அர்த்த ஜாமப் பூஜைக்கு வந்திருந்தான்; ஆனால் அவன் மற்றவர்களைப் போலப் பூஜை ஆனதும் உடனே வெளியேறிவிடவில்லை. தனக்குப் பதினாறு வயசு அன்றுடன் நிரம்பிவிட்டதென்றும், அன்றிரவு எமன் தனக்காக வருவான் என்றும் அவனுக்குத் தெரியும். அவன் யார் கண்ணிலும் படாமல் கர்ப்பக்கிருகத்துக்குள் நழுவிச் சிவனது நிழலில் ஒளிந்து கொண்டிருந்தான். விடிவிளக்கு ஒன்றைத் தவிர மற்ற எல்லா விளக்குகளையும் அணைத்துவிட்டுக் கோவில் அர்ச்சகர் ஒருதரம் கர்ப்பக்கிருகத்தைச் சுற்றிக் கண்ணை ஓட்டிவிட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு போய்விட்டார். கர்ப்பக் கிருகத்தில் இப்போது அச்சிறு ஒளியையும், சர்வ வியாபியான சிவனையும், எமனை எண்ணித் திகிலுற்ற தன்னையும் தவிர யாரும் இல்லை என்று மார்க்கண்டன் எண்ணினான். ஆனால் அந்த ஒரு விளக்கின் வெளிச்சமும் அதனால் சுவர்களில் விழுந்த நிழல்களும் விதவிதமான உருவங்கள் எடுத்து, சிவகணங்கள் என்று சொல்லும்படியாகக் கோரத் தாண்டவம் ஆடின.

ஆசிரமத்திலே அவனுக்குப் பழக்கப்பட்ட பல்லி, கரப்பு முதலிய ஊரும் ஜாதிக்கு இங்கும் குறைவில்லை. தலைக்கு மேலே விர் என்று ஒரு கரப்புப் பறந்தது. எமன்தான் வந்து விட்டானாக்கும் என்று மார்க்கண்டன் பயந்து ஓவென்று அலறிக் கொண்டு ஆவுடைமேல் விழுந்தடித்து அமிருதலிங்கத்தைக் கட்டிக் கொண்டான். தன்னைப் பயமுறுத்தியது எமன் அல்ல, ஒரு கரப்புத்தான் என்று கண்டவுடன் அவனக்கு வெட்கமாகவே இருந்தது. நிமிர்ந்து அமிருதலிங்கத்தைப் பார்த்தான். சிவபிரான் அவன் பயத்தைக் கண்டு நகைக்கவில்லை என்றே தோன்றிற்று. சிவபிரானுக்குத்தான் பக்தர்களின் பக்தியைக் கண்டு பரவசமடையும் சக்தியும், அவர்கள் தம்மைப் பற்றியவரையில் எவ்வளவு அசட்டுத் தனம் செய்தாலும் சகித்துக் கொள்ளும் சக்தியும் உண்டு. அவர்கள் மட்டும் அவருடைய அழிக்கும் சக்தியில் முழு நம்பிக்கை வைத்து விடவேண்டும். அவ்வளவுதான் அவர் கேட்டது.

லிங்கத்தைக் கட்டிக்கொண்டு மண்டியிட்ட சிறுவன் எழுந்திருக்கவில்லை. அவன் வாய் சதா சிவநாமங்களை உச்சரித்துக் கொண்டே இருந்தது. அவனை எமன் அணுகிக் கொண்டிருந்தானே தவிர, அவன் உண்மையில் இன்னும் சரியானபடி வாழ்க்கையை அறியாத பாலகன். பதினாறு வயசு ஆவதற்கு வெகுகாலம் முன்னரே அவன் சிவ பக்தனாகிப் பழுத்துவிட்டான். படிகளின் உதவியேயில்லாமல் அவன் எப்படியோ ஏணியின் உச்சியில் இருந்தான். அந்தப் பக்தி ஒன்றுதான் தன்னை எமன் கையிலிருந்து காப்பாற்றக்கூடியது என்ற ஒரே நம்பிக்கைதான் அந்தப் பக்திக்குக் காரணம். வாழ்க்கையை அறியாத பாலகன்தான் எனினும் அவன் உள்ளமும், உடலும் வாழ விரும்பின. எமனை வரவேற்கத் தயாராக இல்லை.

மிருகண்டு மஹரிஷி பல தடவைகளில் அவனிடமே அவன் பிறந்த கதையைச் சொல்லியிருக்கிறார். பிள்ளைக்காகத் தானும் தன் பத்தினியும் தவம் செய்ததையும், பகவானே வந்து நூறு வயசு வாழக்கூடிய அசட்டுப் பிள்ளை வேணுமா, சிவபக்தனாக பதினாறு வருஷம் வாழ்ந்து இறந்துவிடக்கூடிய பிள்ளை வேணுமா என்று கேட்டதையும், தம் பத்தினி தம்மிடம் ரகசியமாகமட்டும் அசட்டுப் பிள்ளையானாலும் தீர்க்காயுசாக இருக்கும் பிள்ளைதான் வேணுமென்று சொன்னதையும், தாம் அவள் சொன்னது அசட்டுத் தனமென்று, கெட்டிக்காரப் பிள்ளை-வேணுமென்று கேட்டதையும் சொல்லியிருக்கிறார். மார்க்கண்டனும் அவன் தாயும் இந்த

விஷயத்தில் ஒரு கட்சி. மிருகண்டு மஹரிஷி எதிர்க்கட்சி-ஆனால் அவரும் தன் கெட்டிக்காரப் பிள்ளை அல்பாயுஸுதான் என்று விதிக்கப்பட்ட பிள்ளை-தன் கெட்டிக்காரத்தனத்தினால் எமனையும், அவளுக்கு வரமளித்த பகவானையும் மாற்றிவிடலாகாதா என்றுதான் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தார். அதன் பொருட்டு அவர் சிவபக்தி எனும் மார்க்கத்தை அவனுக்கு உபதேசித்து அமிருதகடேசுவரரிடம், நான் செய்வது இனி யாதுமில்லை என்று ஒப்படைத்து விட்டார்.

ரத்தத்தில், உடன் பிறந்து ஓடும் வாழ்க்கைப் பற்றுதல் என்பது யாருக்கும் உள்ளதுதான். மார்க்கண்டச் சிறுவனின் உள்ளத்திலே என்ன நேருமோ, கடவுள் காப்பாற்றுவாரா என்று சந்தேகமும் அதன் பக்கத்திலேயே காப்பாற்றுவார்; கைவிட்டுவிட மாட்டார் என்ற ஒரு திடமான நம்பிக்கையும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு வியாபித்து நின்றன. பதினாறு வயசுக்குள், இவ்வளவு சிவபக்தி காட்டியவன் மார்க்கண்டனைப் போல ஒரே லக்ஷ்யமாகச் சிவநெறி நின்றவன் வேறு யாரும் இல்லை என்று உலகெலாம் போற்றிற்று. அது மார்க்கண்டனுக்கும் தெரியும்; சிவபிரானுக்கும் தெரிந்திருக்க வேண்டும்; அவர் இப்படிப்பட்ட பக்தனைக் கைவிட்டு விடுவாரா? உலகமே அவரைத் தூற்றும்; சைவ மதமே, சிவபக்தியே, மற்ற எவ்வளவோ பக்திகள்-மதங்களைப் போல உலகிலிருந்து மறைந்து விடும். என்ன சொன்னாலும் கெட்டிக்காரனாக, மூளையுடன் மனிதனாகப் பிறந்த குற்றத்தினாலோ என்னவோ, மார்க்கண்டன் மனத்தில் இந்த விசேஷமான முக்கியமான வினாடியிலும் எவ்வளவோ அவநம்பிக்கைகளும் சந்தேகங்களும் களியாட்டம் போட்டன. ஆனால் அவன் வாய் சிவநாமங்களை உச்சரிப்பதை நிறுத்தவில்லை; அவன் கை அமிருதலிங்கத்தைப் பிடித்திருந்த பிடியைத் தளர்த்தவில்லை.

நள்ளிரவில் எமன் வந்தான். உதைபட்டான். மார்க்கண்டனின் உயிரைக் கவரச் சக்தியில்லாதவனாகப் பாசக் கயிற்றைச் சுருட்டி எடுத்துக்கொண்டு தலைகுனிந்தவனாகத் திரும்பிவிட்டான். தேவ லோகத்தில் போய் யாருடைய ஆத்மாவையோ காட்டி, “இது மார்க்கண்டனுடையது” என்று அவன் சொன்னதாகவும், சிவபிரானே, “மார்க்கண்டன் இறக்கவில்லை” என்று நிரூபிக்க வேண்டிவந்தது என்றும் கொஞ்ச காலம் உலாவிய வதந்தி நிஜமல்ல என்றே நாம் நம்பலாம். தேவலோகத்துச் செய்தி எப்படியானாலும் பூலோகத் திலேயே சைவ மதமும், சிவபக்தர்களுக்குத் தங்கள் மார்க்கமுமே சிறந்த மார்க்கமென்று நிரூபிக்க இன்னொரு ருசுவும் கிடைத்து

விட்டது. அதுவும் எப்படியானாலும் பாதகமில்லை. மார்க்கண்டனைப் பற்றிய வரைவில் அவன் பதினாறு வயசைத் தாண்டி விட்டான். என்றும் பதினாறு வயசாக வாழ வரம் பெற்றுவிட்டான். அன்றிரவு எமன் வந்துபோனபின் அவன் எப்பொழுது காலையில் கர்ப்பக்கிருகத்தின் கதவைத் திறப்பார்கள், அங்கிருந்து வெளியேறலாம் என்று காத்திருந்தான். அப்பொழுதும் அவன் நாக்குச் சிவபெருமான் திருநாமத்தை உச்சரிப்பதை நிறுத்திவிடவில்லை.

யுகங்கள் எவ்வளவோ வந்து கழிந்துவிட்டன. பிரம்ம வருஷங்கள் சென்றுவிட்டன எவ்வளவோ பிரம்மாக்கள் தோன்றி மறைந்து விட்டார்கள்.

மாயூரத்திலிருந்து தரங்கம்பாடி போகும் ரயிலில் நான் சென்ற வாரம் மார்க்கண்டனைச் சந்தித்தேன். அவனுக்கு வயசு இன்றும் பதினாறுதான். அவனைப் பார்த்தால் எவ்வளவோ யுகங்கள் வாழ்ந்துவிட்டவனாகத் தோன்றிற்று. ஒருநாளைப் பசியும், பட்டினியும் ஒரு மனிதனுக்கு வயசை ஒரு யுகம் அதிகப்படுத்திக் காட்டப் போதாவா? அவன் ஒரு நாளல்ல, ஒரு மாசமல்ல, ஒரு வருஷமல்ல இப்படிக் கடத்திக் கொண்டு வந்திருக்கிறான்.

“நான்தான் மார்க்கண்டன். அமிருதகடேசுவரரிடம் அன்று பக்தி செலுத்தி எமனை விரட்டிச் சிரஞ்சீவியானேன். இன்று எமன், அந்தப் பழைய ஞாபகத்தால் என்னை அணுகப் பயப்படுகிறான். என்னை அழைத்துப்போக எமனுக்கு அந்தச் சிவனே உத்தர விட்டாலொழிய என்னை அணுகமாட்டான் போலிருக்கிறது. பக்தி செய்து சிவனிடம் அந்த வரத்தைப் பெற நான் போகிறேன்” என்றான்.

அவன் யாரோ பைத்தியம் என்று எண்ணினேன் நான். “காலணா இருந்தால் கொடுசாமி” என்று அவன் கேட்ட பிறகுதான் அவன் கெட்டிக்காரக் பிச்சைக்காரன் என்று எனக்குத் தெரிந்தது.

ஆனால் அவன் திருக்கடையூரில்தான் இறங்கினான். *(1942)*

●

ஞானரதம்

***1986***